

# பங்கஜ் மல்லிக்

என் கண்ணுக்கு அவன் இரண்டு ஆள் உயரம் இருந்தான். "ஏண்டா, நீ ராமசாமி வீட்டுக்குப் பக்கத்திலேதானே இருக்கே?" என்று கேட்டான்.

"ஆமாம்."

"என் ஹிஸ்டரி புக்கைத் தூக்கிண்டு ஓடிட்டான். போய் வாங்கி வா."

"இப்பவேயா?"

"சாயங்காலம் வீட்டுக்குக் கொண்டாடா."

"உன் பேரு என்ன?"

"க்ஸேவியர் டேவிட்."

"என்ன?"

"க்ஸேவியர்டா, முண்டம்!"

எனக்கு அவன் பெயரைச் சொல்ல முடியாதபோது எப்படி ராமசாமி போன்ற ரவுடிப் பையனிடம் போய் புத்தகம் வாங்கி வருவது என்று கவலையாகிவிட்டது.

அன்று மாலை ராமசாமியிடம் போனேன். "அந்த உசரமா இருக்கிற பெரிய கிளாஸ் பையன் ஹிஸ்டரி புக் வாங்கி வரச் சொன்னான்" என்றேன்.

ராமசாமி என் தலையைத் தட்டினான். "போடா" என்றான்.

"ஹிஸ்டரி புக்."

"போடா."

இந்த ராமசாமியை நன்றாக உதைத்தால் சரியாக இருக்கும் என்று எனக்குத் தோன்றியது. நான் நேராக க்ஸேவியர் வீட்டைத் தேடிப் போனேன்.

எங்கள் வீட்டிலிருந்து நான்கு பர்லாங்குக்குள் மூன்று பள்ளிக் கூடங்கள். (ஒரு மைல் தள்ளி நான்காவதாக இருந்ததில் தான் நான் படித்தேன்) முதலில் ஒரு பெண்கள் ஹைஸ்கூல். இரண்டாவது போர்டிங் கூடிய பையன்கள் ஆரம்பப்பள்ளி. மூன்றாவது ஒரு பெண்கள் கான்வெண்ட். வழி வளைந்து வளைந்து போகும். அதனால் மூன்று பள்ளிகளும் வெவ்வேறு திசையை நோக்கி இருக்கும்.

இரண்டாள் உயரப் பையன் போர்டிங் பள்ளி அருகில் இருந்ததாக அனுமானம். அந்தச் சுற்று வட்டாரத்தில் நிறையப் பையன்கள் இருப்பார்கள். புதிதாக ஒருவன் அவர்களிடம் மாட்டிக் கொண்டால் அழவைத்து விடுவார்கள். அது தெரிந்தும் நான் க்ஸேவியர் டேவிட் வீட்டைத் தேடிப் போனேன். டேவிட் மறந்து விட்டது. க்ஸேவியரைக்கூட சாவியர் என்று விசாரித்தேன்.

''ஃபிரான்சிஸ் க்ஸேவியரா!'' என்று ஒரு பையன் கேட்டான்.

"ஆமாம்" என்றேன்.

அவன் ஒரு வீட்டைக் காண்பித்து, "அதுதான்'' என்றான். நான் கதவைத் தட்டினேன். ஒரு பெண் கதவைத் திறந்தாள். நான் "க்ஸேவியரைப் பார்க்கணும்" என்றேன். அவள் உள்ளே போய் ஒரு பெரியவரை அழைத்து வந்தாள். அவர் "என்ன?'' என்று கேட்டார்.

"க்ஸேவியர்."

"நான்தான் க்ஸேவியர்."

"இல்லை, பத்தாவது கிளாஸ் பி..."

பெரியவர், "டேய், ஃபிரான்சிஸ்!'' என்று கூப்பிட்டார். கோபத்துடன் உள்ளே போனார். ஒரு பையன் வந்தான். "என்னடா வேணும்?"

"க்ஸேவியர் வேணும்."

"நான்தான் க்ஸேவியர்."

"நீ இல்லே. உசரமா இருப்பான்."

அவனுக்கும் கோபம் வந்தது. "என் பேரு ஃபிரான்சிஸ் க்ஸேவியர்" என்றான்.

"அவன் பேரும் அதுதான்."

''போடா'' ஃபிரான்சிஸ் க்ஸேவியர் என் தலையைத் தட்டினான். "போடா."

நான் தெருவுக்கு வந்தேன். ''டேய்'' என்று அவன் கூப்பிட்டான்.

நான் நின்றேன்.

"உன் பேரு முத்துதானேடா?"

"ஆமாம்."

"அந்த கான்வெண்ட்லே போய் மணி அடி."

நான் விழித்தேன்.

"க்ஸேவியர் டேவிட் அங்கே இருக்காண்டா, அங்கே போய் மணி அடி."

அந்த கான்வெண்டின் உயரமான கேட் அருகில் சென்ற பிறகுதான் புரிந்தது. அங்கு கேட்டருகில் மேலேயிருந்து ஒரு கயிறு தொங்கியது. நான் அதை பிடித்து இழுத்தேன்.

அந்த கேட்டிலேயே ஒரு சிறு துவாரம். அதைத் திறந்து ஒரு முகம், "ஏய்! ஏய்! ஏன் மணியைப் போட்டு ஒடைக்கிறே?" என்று கேட்டது.

"க்ஸேவியர் டேவிடைப் பாக்கணும்."

"அடே! பக்கத்திலே போய்க் கூப்பிடு! மணியை ஒடைக்காதே!" முகம் மறைந்தது.

நான் கேட்டுக்குப் பக்கத்தில் சுவரோரமாக நின்று க்ஸேவியர் டேவிட் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டேன். அது நல்ல உயரமான சுவர். அதற்கும் மேல் க்ஸேவியர் டேவிட் முகம் தெரிந்தது.

"யாருடா?"

"நீதான் ராமசாமிகிட்டே ஹிஸ்டரி புக் வாங்கி வரச் சொன்னியே?"

"கொடுத்தானா?"

"இல்லை, என்னை அடிச்சான்."

"சரி, போ."

"க்ஸேவியர் டேவிட்."

"என்னடா?"

"இங்கே இன்னொரு க்ஸேவியர் இருக்கான் தெரியுமா?"

"அங்கே ஏண்டா போனே?"

"எனக்கு உன் வீடு தெரியாதே!"

"அவன் கிட்டே போகாதே. அவன் கெட்ட பையன்."

எனக்கு நல்லது கெட்டது எல்லாம் ஒரு மாதிரிதான் இருந்தது. எல்லாரும்தான் என் தலையைத் தட்டினார்கள்.

நான் திரும்பி வந்து கொண்டிருக்கும் போது ஃபிரான்சிஸ் க்ஸேவியர் வாசலில் நின்று கொண்டிருந்தான். நான் அவனைப் பாராத மாதிரிப் போனேன்.

"இங்கே வாடா" என்று கூப்பிட்டான்.

நான் போனேன்.

"நீ பாடுவே இல்லே?"

"அஞ்சு பாட்டுதான் தெரியும்."

"நாளைக்கு வந்து பாடு."

"எங்கே?"

"எங்கேயிருந்தா உனக்கென்னடா? பாடு!"

"சரி."

"சரியா நாலு மணிக்கு இங்கே வந்துடு."

"எனக்கு நாலு வரை ஸ்கூல் இருக்கே."

"அஞ்சு மணிக்கு வா. வரலை, உன் தலையை ஒடைச்சிடுவேன்."

அடுத்த நாள் ஐந்து மணிக்கு அவன் வீட்டில் இருந்தேன். அவன் ஒரு சிதாரைத் தூக்கி வந்தான். என்னிடம் ஒரு ஹார்மோனியத்தையும் தபலாவையும் கொடுத்தான். என்னால் ஹார்மோனியத்தைத்தான் தோளில் தூக்கிக்கொள்ள முடிந்தது. அப்போது எங்கோ வெளியிலிருந்து அவனுடைய அப்பா சைக்கிளில் வந்தார். "ஏண்டா, நடந்தா போகப் போறீங்க?" என்று கேட்டார்.

"பின்னே?"

"எல்லாத்தியும் ஒரு டாங்காலே எடுத்துப் போங்க."

நான்தான் ஓடிப்போய் ஒரு டாங்கா கொண்டு வந்தேன். எனக்குப் பயம், வண்டிச்சத்தம் குறித்துச் சண்டை யந்து டாங்காக்காரன் என்னைப் பிடித்துக் கொள்வானோ என்று. ஆனால் அப்படி ஏதும் நடக்கவில்லை. வாத்தியங்களுடன் ஃபிரான்சிசும் நானும் டாங்காவில் ஏறி வெஸ்லி கில்டுக்குப் போனோம்.

அங்கு நிறையப் பேர் குழுமியிருந்தார்கள். உயரமான க்ஸேவியர் இன்னொரு க்ஸேவியரைக் கெட்டவன் என்று சொன்னதற்குக் காரணம் தெரிந்தது. நிறையப் பெண்கள் ஃபிரான்சிஸ் க்ஸேவியருடன் சிரித்துப் பேசினார்கள். அவன் என்னை "இவன்தான் புது சைகல்" என்று அறிமுகப்படுத்தினான்.

பல்சுவை நிகழ்ச்சி தொடங்கியது. குழந்தைகள் 'நல்ல சமேரியக்காரன்' நாடகம் நடத்தினார்கள். ஒரு சிறுவன் 'குன்று உபதேசம்' புரிந்தான். என்னைப் பாடச் சொன்னபோது 'ஞானக் கண் ஒன்'றும் 'காயாத கான கத்தே'யும் பாடினேன். எல்லா நிகழ்ச்சிகளுக்கும் ஒரே மாதிரிதான் கரகோஷம் செய்தார்கள். ஃபிரான்சிஸ் சிதார் வாசித்த நிகழ்ச்சிதான் கடைசி. எனக்கு என்றும் அவன் காலடியில் விழுந்துகிடக்க வேண்டும் போலிருந்தது.

ஏழு மணிக்கு எல்லாம் முடிந்துவிட்டது. ஃபிரான்சிசிடம், "நான் போறேன்" என்றேன்.

"வீட்டுக்கு வந்து ஏதாவது தின்னுட்டுப் போடா" என்றான்.

"நான் மாமிசம் சாப்பிட மாட்டேன்."

"உனக்கு எவண்டா கறி தரப்போறான்? சும்மா வாடா!"

அன்று என்ன விசேஷம் என்று எனக்குத் தெரியவில்லை. ஃபிரான்சிஸ் வீட்டில் கேக்கும் வேறு தின்பண்டங்களும் நிறைய வைத்திருந்தார்கள். காராசேவ், பூந்தி, முந்திரிப்பருப்பு, பகோடா, ஜிலேபி. எல்லாம் ஷோலாப்பூர்வாலா கடையில் வாங்கியது தான்.

ஃபிரான்சிஸ் என்னை வீடு வரை கொண்டு வந்துவிட்டான். போகும் வழியில் நான் கேட்டேன். "நீ முதல்லே வாசிச்சது 'அப் ஆயி பஸந்த் பஹார்'தானே?"

"ஆமாம், உனக்குத் தெரியுமா?"

"பங்கஜ் மல்லிக் பாடினது. எங்க பக்கத்து வீட்டிலே ரிகார்டு இருக்கு."

"ரொம்ப நல்ல பாட்டில்லே?"

"நீ ரொம்ப நன்னா வாசிச்சே."

ஃபிரான்சிஸ் என் தோள்மீது கை போட்டு என்னை அணைத்துக் கொண்டான். "நீ சிதார் கத்துக்கறயாடா? நான் கத்துத் தரேன்."

"நிஜம்மாவா?"

"ஆமாண்டா. நாம இரண்டு பேரும் எல்லா பங்கஜ் மல்லிக் பாட்டையும் பாடுவோம். முடிஞ்சா கல்கத்தா போயி பங்கஜ் மல்லிக் முன்னாலியே பாடுவோம்."

நான் அப்போதிருந்த மனநிலையில் அவன் வடதுருவம் போகலாம் என்றால்கூடச் சரி என்றிருப்பேன். என் வீடு வந்துவிட்டது. ஃபிரான்சிஸ் என்னை அன்புடன் அணைத்து, "டேய், அந்த டேவிட் கூடச் சேராதே" என்றான்.

நான் பதில் பேசவில்லை.

"கான்வெண்ட்லே இருக்கானேன்னு நினைக்காதே. அவன் ரொம்பக் கெட்டவன்."

க்ஸேவியர் டேவிட்டை மீறி நான் ஃபிரான்சிஸ் க்ஸேவியரிடம் பங்கஜ் மல்லிக் பாட்டு கற்றுக்கொள்ள ஆரம்பித்தேன். ஆனால் பயிற்சி அதிக நாட்கள் நடக்கவில்லை. புஷ்பா என்றொரு பெண் அவனை போலீஸ் ஸ்டேஷன் வரை இழுத்துவிட்டாள். விபரீதம் ஏதும் நிகழக்கூடாது என்று அவனுடைய அப்பா அவனை வெளியூர் அனுப்பிவிட்டார். அதன் பிறகு நான் அவனைச் சந்திக்கவில்லை.

ஆனால் என் அப்பாவிடம் கெஞ்சிக்கேட்டு பங்கஜ் மல்லிக் பாடிய 'அப் ஆயி பஸந்த் பஹார்' இசைத்தட்டை விலைக்கு வாங்கி வந்தேன். இரண்டு ரூபாய் ஒன்றரை அணா. இப்போது தேய்ந்து பழையதாகப் போய்விட்டது. தட்டு முழுக்க மண்ணெண்ணெய் தடவி கிராமபோனின் சவுண்ட் பாக்ஸையும் இலேசாக விரலால் தாங்கிப் பிடித்தால்தான் பாட்டு கேட்கும். அது பங்கஜ் மல்லிக் குரலாயிருந்தாலும் என் காதில் ஃபிரான்சிஸின் சிதாராகத்தான் ஒலிக்கிறது.

1983